சிவமயம்.

ஸ்ரீ வசவதேவரென்னும்,

திருநந்திதேவர்

# பிள்ளைத்தமிழ்

திருக்கயிலாசபரம்பரைப் பொம்மபுரம்
ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதீன வித்துவானும்,
பண்ணுருட்டி
நமசிவாய நாவலர் மாணாக்கருமாகிய
வாகீச பக்த நாவலரென்னும்

## அப்பாவையரவர்கள்

இயற்றியது.

இஃது,
சிதம்பரம்
சொக்கலிங்கபிள்ளை குமாரரும்,
பண்ணுருட்டி
ரிவினியூ இனிஸ்பெக்டரவர்களுமாகிய
முத்துவேலாயுதம்பிள்ளையவர்கள்
பொருளுதவியால்,
சென்னை:
மஹாலட்சுமி விலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

விசுவாவசு ௵ மகரமதி.

சிவமயம்.

ஸ்ரீவசவ தேவரென்னும் திருநந்திதேவர்.

# பிள்ளைத்தமிழ்.

---

## காப்பு.

மாமேவு தந்தைதன் மார்பிடைத் தோற்றும் வராகத் தனிக்
கோட் டுடன், மன்னுதன் கைக்கோ டிறக்கொண்டு வைத்துமிளிர்
மற்றதின் வண்ண நோக்கித்,-தாமேவு கைக்கோடு மக்கோடு மொ
ருகளிறு தான்பெற்ற கோடே டெனத், — தன்னுளத் தெண்ணிவிளை
யாடல்புரி யைங்கரத் தற்பரனை யஞ்சலிப் பாந்,—தாமேவு கைலைம
லை தனினின்று சிவசுணைத் தொகையடிய ரோடுபோந்தே, தொல்லு
லகிலிங்குளா புரியெனும் பதியினிற் றோன்றியே தெய்வநிலைமைத்,-
தேமேவு மரியவொரு குழவியாய் நிலவியே செய்யவவ் வீரசைவச்,
செயலெலா மிவ்வுலகி லறிதரச் செய்தவொரு தேவனைக் காக்க வெ
ன்றே.

## காப்புப்பருவம்.

---

### திருமால் சிவபெருமான் உமாதேவியார்.

உலகெலாங் காக்குமோ ரச்சுதக் கடவுளி னீரடியு முயர்நீற்
றொடு, முருத்திரக் கண்மணியு முடையவொரு தனிமுத லுமாபதியி
னீரடி களு,—மிலகுபரு வதமன்ன னீன்றமர கதமேனி யியல்பசுங்
கொடியி னடியு, மின்னேரி னடியெலா மென்முடிக் கணியாக வே
ற்றித் துதித்து மகிழ்வாம்,— மலகன்ம மொருவியே தொல்லுலகின்
மருவியொருமகிமைபெறு வீரசைவ, மன்னுமல் லமதேவ தந்தை

யிணையடியேவி மாசற்ற லங்க லிங்க,—மிலகுவடி வாயுற்ற சிவ கணங் கட்கெலா மிறைமையாய் வீற்றிருந்த, வியல்வசவ தேவ னெனு நாயர்சரித்தவோ ரிளவலைக் காக்க வென்றே. (௧)

## விநாயகக்கடவுள் முருகக்கடவுள்.

செய்யமாங் கனியொன்று பெறவேண்டி யையனைச் செவ்வி தின் வலஞ் செய்துமுற், றோர்ந்தவக்கனிபெற்ற வள்ளலீ ரடிகளுஞ் செய்யமுள ரித்தேவனைத்,—துய்யவொரு மொழியால் வெருட்டியே சிறையிட்ட தோன்றலின் றுணையடிகளுந், தோமறக் கொண்டெனது முடியினுக் கணிபெறச் சூட்டித் துதித்து மகிழ்வாம்,-வெய்யசம ணச்சமயங் குன்றிடவுஞ் சிவசமய மெய்யெனப் பரமதமெலா, மேலாக வேநினைத் திவ்வீர சைவத்துண் மேவிடவு மருள் வடிவமாய்ப்,—பையவிவ் வுலகினிற் றோன்றியே சங்கமப் பத்தியின் மேவி நிற்பான், பான்மையுறு குழவியாய் வந்தவ தரித்தவொரு பண்ணவற் காக்க வென்றே. (௨)

## அல்லமதேவர், சித்தராமதேவர், கொக்கிதேவர் முதலிய சரணர்.

அன்பே திரண்டவடி வாம்நிராங் காரசுஞ் ஞானியிவ ராற்றிய தவு, மதுவே திரண்டதெண வந்தவ தரித்தவல் லமதேவ னீரடிகளுந்,—துன்பறுஞ் சித்தரா மன்கொக்கி தேவனுந் தூயமடி வாலமாச்சன், றுய்யமோ ளிகைமார னக்கமா தேவியொடு தோன்றிவரும் வீரசைவ,—ரின்புபெறு சிவசரணர் தூயதிரு வடிகளு மெப்போது மேத்தெடுப்பா, மெழிறிருக் கைலைமலை யிற்காவல் பூண்டரிய விமையவர்க ளோடுமெழிலார்,—மன்பெரிய தவரெலா முன்னே வணங்கியேவள்ளல்பாற் செலவுத்தரம், வாங்கியே கப்பெரிய மூர்த்தியாய் நின்றவொரு வள்ளலைக் காக்க வென்றே.

## நால்வர் முதலிய அடியவர்.

வெங்குருவி னிற்சிவ பாதவிரு தயர்மகவின் மேவிமூன் றக
வை தனிலே, மெய்ஞ்ஞான முற்றதிரு ஞானசம் பந்தனும் வெண்
ணீறு தன்னொ டுடற்,—பொங்குசூலையினீங்கி யுய்ந்தவாகீசனும்போற்
றுதிரு நாவலூரிற், போந்தவுன் றொண்டனுஞ் சுந்தரனும் வாதவூர்ப்
போற்றுவூ சகதேவனுந்,—தங்குமற் றைத்தொண்ட ரனைவரு
மிதயமலர் தானுறத் தண்ண டியினை, தயங்குஞ் சிரத்தினிற் சூடிய
வர் தங்களைத் தப்பா திறைஞ்சல் செய்வாம்,—நங்குரு பரன்கைலை
யல்லமாப் பிரபுவின் கல்லடிக ளைப்பற்றியே, நானில மதிற்பத்தி
தனைமிக வளர்த்தவொரு நந்தியைக் காக்க வென்றே. (௪)

## சங்குகன்னர், சிவஞானபாலையர் முதலியோர்.

வெள்ளிமால் வரையோங்கு கணநாத ராஞ்சங்கு கன்னராயக
கல்லா டையும், வெண்ணீறு சண்ணித்த திருமேனி கண்மணியு
மேவுகுண் டலபூடண,—மெள்ளலறு மாத்திரைக் கோல்விபூ திப்
பையு மினியசிவ லிங்கமோடே, யெழில்சூழ் தருகடற் றோன்றி
வெளி வந்தவோ ரியல்பால சித்ததேவர்,—விள்ளுமவ ரடியரா
ய்த் தோன்றுமொரு சிவஞான பாலையர் மேவுமெற்கே, மிளிர்போத
காசிரிய பஞ்சாக்க ரப்புலவர் மேன்மைபெறு கலையுணர்விறைற்,—
தள்ளருஞ் சந்தேக மாதிகளை வித்தருளிராமலிங் கத்தேசிகர், தங்
குமிவர் பதமெலாம் போற்றுவாம் நந்தியின் றமிழ்மகவு கவி
தழையவே.

காப்புப் பருவம்
முற்றிற்று.

# செங்கீரைப் பருவம்.

ஒங்குசீர்க் கைலைமலை பரசிவச் சம்பந்த முளதென் றுணர்த்த
வொருதா, னுவப்புடன் மடித்தபர சிவமென வுணர்ந்திட வொருதா
ளெடுத் தூன்றியே,—பாங்குபெறு வேதாக மாதிகலை தலைமுனம்
பசுபதிப் பாற்பெற்ற சீர், பன்னுமது போலிருகை யூன்றிமுக மசை
யவே பயிலாகமங்கண்]முடியாத், தாங்குமொரு வாதுள விதிப்படி
தரித்தமெய்த் தற்பரக் கனலிங்கமுந், தானசைய வெண்ணீ றணி
ந்ததிரு மேனியுந் தானசைய வரிய கைலைத்,—தேங்குபெரு மலையி
னிற் காவல்புரி சற்குரவ செங்கீரை யாடி யருளே, திருநந்தி தேவ
னெனு மொருவசவ தேசிகா செங்கீரையாடியருளே. (க)

மாமேவுசிவபிரா னோர்பகலின் மதுரையின் மலைமங்கைதானறி
தர, மன்னும்வே தாகமக் கலையினுண் பொருளெலாம் வகுத்திடுங்
காலெமன்னை,—தாமேவியன்னவை செவிக்கேற்றிடாதவத் தகைமை
யைக் கண்டுசிவமுந், தான்சினங் கொண்டே சபித்திடலு மவணின்ற
சண்முகனு மத்திமுகனும்,—வாமேவியவ்வேத முறையினைச் சலதி
யின் மருவப் பறித் தெறிதலு, மன்னுமது சிரமேற்று மலிகடற் சுற
வாகி வாழ்ந்தவச வண்ணமணியே,—தேமேவு மபரசம் பெனநின்ற
செல்வமே செங்கீரை யாடியருளே, திருநந்தி தேவனெனு மொரு
வசவ தேசிகா செங்கீரை யாடியருளே. (உ)

சந்தமிகு மறைமொழியு மெங்கைபாற் சாலச் சிவாகமந் தனை
யுணர்ந்தே, சனற்குமா ரப்பெரிய முனிவர்க் குரைக்கவவர் சத்திய
ஞானிக்குச்சொல,—வந்தமிகு மவர்பரஞ்சோதிக்குரைத்திட வவர்க
டற் சூழ்புவியினு, ளரியதக்கிணதேய மெய்கண்டமுனிவர்க் கறை
ந்திடக் கொண்டவரதை,—மந்தமறு சிவஞான போதமென வேத
மிழில் வாய்மலர் தரற்காரணம், மருவுநின் னருளே யெனப்புல
வர் போற்றிட மன்னும் வசவண்ண மணியே,—செந்திரு வென
ச்சிவக் குறிகொண்ட தெய்மே செங்கீரை யாடியருளே, திருநந்தி
தேவனெனு மொருவசவதேசிகா செங்கீரை யாடியருளே. (ங)

வேறு.

தெருள்பெறு மணியே சிவமுறு மணியே திருவே யுருவே யென்
சித்தமு ணின்றே பத்திவளர்க்குந் தெய்வத் திருவுருவே
யிருள்வளர் பாசத் தவர்மன மேகா வேந்தற் றனிமுதலே
யிடப முகந் திரிந் தேயவு தரித்த வென்று ருயிரே நன்
மருளறு தூய்மைத்தவர்மனம் வாழ்ந்தே மற்றவர் வேட்கை யெலா
மன்னிட வீந்தே வள்ளலெனும்பெயர் வாய்ந்தபெருந்தகையே
யருளுறு திருநந் தித்தே வேநீ யாடுக செங்கீரை
யல்லம தேவ னல்லருள் பெற்றோ யாடுக செங்கீரை. (ச)

இன்பே மிக்குறும் வானத்தவர்களு மிருபாங் கிருகதிர்போன்
றிருளக லத்திகழ் திகிரிச் சங்க மேந்திய திருமாலு
மன்பே ருலகை யாக்கிய கலையின் மாதுறு முண்டகனு
மற்றைய தேவ ரிருடிகள் சித்தரும் வந்து வணங்கலி னுன்
முன்பே கைலைக் கோயிலின் வாயின் மூடாத் தகைமையுற
முற்பெறு காவல் புரிந்திடு மாற்றன் முறையே முறையாக்கொ
ளன்பே வடிவெனு நந்தித் தேவே யாடுக செங்கீரை
யல்லம தேவ னல்லருள் பெற்றோ யாடுக செங்கீரை.

செங்கீரைப்பருவம்

முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

விண்ணின் றிழியு மருவியெதிர் விருப்பின் விளையா டுபுதுதி க்கை, வீசி யுமிழ்ந்தி மேலோங்க வீசுபுனல்போய் வெண்ணிலவின்,– கண்ணுறுமுடலி னணைதரவே நகைவெண் மதியும தனுலே, நாளும் களிர்வெண் மதியென்ன நவிலக்கிடக்குங் கைலைமலை,—யண்ணற் கோயில் வாயிலதன் பாலேயமைந்தாங் கெய்துபெரு, மரியதேவர்

தம்மையெல்லா மளவா யுள்ளே செலுத்து மொரு,—தண்ணக் தருவா மெனும்வசவ தாலோ தாலோ தாலேலோ, சகச மலமா சகல்வீர சைவா தாலோ தாலேலோ. (க)

சோதி வடிவாம் பொற்சிகரத் தோற்ற மதனைச் சுக்கிரனுஞ், சோதி யெனவே யுளங்கொண்டு தோன்று மிதன்கால் நமக்காட்சி,-யீதிம் மலைக்கண்ணுருவதெவ னென்று மருண்டு தெளியாதே, யிருக்கும் போதங் கெய்துகுரு மதியு நோக்கி யிருங்கதிரால்,—நீதிலாத திருச்சைலச் சிகரமெனவே யுளத் தெண்ணித், தெரிந்தே யகலக் குறுநகைகொள் செய்கை யாற்கா லங்கழியுஞ்,—சாதமலை யிடுளடு வந்த தலைவா தாலோ தாலேலோ, சகச மலமா சகல்வீர சைவா தாலோ தாலேலோ. (உ)

வெய்ய கதிரின் நிரளெறிக்க விளங்கு பொன்மா டங்களெலா, மேருகிரியின் னமுமிறைவர் வில்லா யெடுப்பரோ வென்றே,—துய்ய வுளங்கொண் டின்னகரைச் சூழ்நி ஞபத் தூருதெனவே, துணிந்து மாட வடிவுகொடு துதைந்தா லொக்குந் தோற்றமதைப்,—பையக் காட்டு மத்தகைய பசிய பொன்னின் மாடமவண், பரவிநிற்க வப்பொன்னின் பரியாயப்பேர் தாம்பயின்ற,—சைய சவியா னப்புரியின் றலைவா தாலோ தாலேலோ, சகச மலமாசகல்வீர சைவா தாலோ தாலேலோ. (௩)

வேறு.

இடப முகந்திரித் தேவெளி வந்த விறைவா தாலேலோ
வெந்தை பிரானின்றிருக் கைலைக் காவ லிசைந்தவ தாலேலோ
நடமிடு மெந்தையி ஞெருபர தந்தனை நவின்றவ தாலேலோ
நடனச் சதிசழி இ முழவ மதிர்க்கு நற்றவ தாலேலோ
மடமிகு முலகின் மாயை யகற்று மருந்தே தாலேலோ
வசவத் திருநா மம்பெறு நந்தி மாதவ தாலேலோ
தடவரை யோடு பிறந்த மருந்தே தாலோ தாலேலோ
சங்கம பத்திகொள் சற்குரு பரனே தாலோ தாலேலோ. (௪)

ஆரண முற்று மறிந்திடு முத்தம வருமே தாலேலோ
வருளுறு பத்தி யெனும்பயி ராக்கிய வரசே தாலேலோ
வாரண ஞதிய ரனுதின மும்பணி மன்னே தாலேலோ
மலமொரு மூன்று மொருவிய வின்ப வாரியெ தாலேலோ
காரண வாதை யேழ்மேற் சிவவொளி கண்டவ தாலேலோ
ஈரண மனைத்துஞ் சிவவடி வாயுற கண்ணே தாலேலோ
தாரண சிவலிங் கம்புனை வசவ தாலோ தாலேலோ
சங்கம பத்தி கொள் சற்குரு பரனே தாலோ தாலேலோ(க)

தாலப் பருவம்
முற்றிற்று.

---

## சப்பாணிப் பருவம்.

மால்விடைத் தருமவிடை யதிகாரவிடையோடு மருவுவெள் விடை யென்னவே, வாய்த்தவிவ் விடைகளின் மன்னியைந்தொழி லினை வளர்த்தவிறை மிகமகிழ் தர,—நால்விடைச் சொருபமாய் நின்றுகை லாயமலை நற்காவல் பூண்டங்ஙனே, நனுகுமா தேவர்கின் னரிருடி சித்தரும் நவில்கருடர் கந்தரு வருங்,—கால்விசை யறிந்தயோ கத்தரிவர் தாமெலாங் கடவுளிந் நந்தியென்றே, கைகளைச் சிரமீ மிசைக்குவித் தேகிற்கும் கடவுளே நியகன்மத்,—தால் வரும் மலமா சகன்றவொரு தெய்வமே சப்பாணி கொட்டி யருளே, தருமறை யுணர்ந்திறை வனைத்தாங்கு நந்தியே சப்பாணி கொட்டி யருளே. (க)

முத்திசா தனமொன்று பெறவேண்டிற் பத்தியே முதலெனக் கொளினலாது, முற்று தெனப்புகலு மரியமு தமிவாளர் மொழியின் திறத்தி லந்தப்,—பத்திவரும் வழிதனக் கொருசூட்சி சொலினபர சம்புவைப் பரவிநிதமும், பயிற்று வடித்தொண்டு கொளினலாதெ

ய்தா தெனப்புகல நின்ற பரமே,—சித்தியில் வகையினின் றிருவடி யினிற்பதாற் றெய்வ! நீயென்ன வேதஞ், செப்பிய மொழித்தி றஞ் சத்திய மெனக்கொண்டு திருவாளர் தாமுணர்ந்தே,—சத்தியு றை நந்தியென் றேகொளுஞ் சற்குரவ சப்பாணி கொட்டியருளே, தருமறை யுணர்ந்திறை வனைத்தாங்கு நந்தியே சப்பாணி கொட்டி யருளே. (உ)

ஓங்குஞ் சராயுச மண்டசஞ் சுவேதச முற்பிச்ச மென்ன வோது, மொருநான்கு பசுவையுந் தளைகொண்டு பூட்டியே யொளிர் மும்மை யுலக மேய்த்தே,—தேங்குசா யங்காலை தறியினிற் கட்டு மிறை செயலெனக் கைலையோங்கு, தெய்வவளநந் தைமுற் பசுவாதி கட்கெலாந் தேங்குமிறை யென்ன நின்றே,—பாங்குறும் பத்திசால் வைராக குணமொடும் பரசிவன் றனையலாது, பகருமற் றைக்கடவு ளர்க்குவீ டுதவிடும் பான்மையதி கார மொன்றே,—தாங்கிநனி போ ற்றிடுந் தகைமைபெறு சற்குரவ சப்பாணி கொட்டி யருளே,—தரும றையுணர்ந்திறை வனைத்தாங்கு நந்தியே சப்பாணி கொட்டியருளே.

## வேறு.

வாதுறு சமய மனைத்தினு மேலாய் மருவிடுஞ் சிவ சமய
மற்றதின் மேலாய் மருவிடும் வீரசை வச்சம யம்மஃதே
நீதறு மங்கலிங் கத்தயிக் கியமாய்த் திகழ்தரு தத்வமசி
செப்பிடு முப்பொருள் கொண்டுளெ தெனவே செவ்விய சாமமறை
யோதுறு மதனு லெங்நெறி யினுமங் நெறிய துயர்ந்ததெனு
வோவறு தொண்டரு ளங்தெளி தரவே யோர்வித் தந்நெறியின்
சோதறு சாதன நீதி தெரிந்தவ கொட்டுக சப்பாணி
கொற்றவன் விச்சலன் மெச்சும ருட்குரு கொட்டுக சப்பாணி()

சங்கம ருக்குண வாதிக ளிதலிற் றகைமைகொ டாய்நீயே
தருமறை யாதியி னுணர்வுப யத்தலிற் சார்தந் தையுநீயே

பங்கமுறுதரு ணெறியுணா திறனுற் பகர்குர வனுநீயே
பரசிவ னைத்தரி சித்திட வருள்பான் மையிற்றெய் வமுநீயே
விங்குரை வகையா லன்னைபி தாகுரு தெய்வமு நீயென்று
•வினிதுற நின்னரு ளேத்துந் திறநேர் வியல்கலி யாணபுரிக்
கொங்குறு பொழில்சூழ் நகரின் றலைவா கொட்டுக சப்பாணி
சொற்றவன் விச்சலன் மெச்சு மருட்குரு கொட்டுக சப்பாணி.

சப்பாணிப் பருவம்

முற்றிற்று.

---

## முத்தப் பருவம்.

கதிதரு மெனப்பலச் சிறுதெய்வ மவையையுட் கருதாத சிவபத்தி யாற், கற்பகத் தருநீழ லாலிலைச் சயனமீக் கருதுகோ கனதமேவி,- வதிதரும்பெருவாழ் வனைத்தையுந் திரணமாய் மதியினுட் கொடு சகத்தின், மன்னுமான் மாக்களின் மலமாசு போக்கியொளி ரல்ல மன் மலரடி பணிஇச்,—சதிருறுஞ் சரணர்பல் லாயிரவர் தாமுணத் தக்கவா றுபசரித்துத், தயங்குமட மேலாது சார்ந்துறை பவர்க்கெலாஞ் சாற்றுசோற் றுக்காவடி,—பதிதரக் கொண்டேட்டு மொருவ சவ வருணாந்தி பவளவாய் முத்தமருளே, பசுபதிக் கைலையினி லுறு புசுக் குலதலைவ பவளவாய் முத்த மருளே. (க)

மாசறுமிந் நந்தியின் பத்தியை வார்த்தையின் வழங்கிடி னறிய கில்லீர், மன்னுகா சினிதனிற் றோன்றியே யணுகிநீர் வளமையிற் காண்க வென்றே,—தேசுறுஞ் சிவகணங் கட்கிறை புகன்றவா சிவகணந் தாமணைந்தே, செய்யநின் பத்தியின் செயலினை நோக்கி யே தேர்ந்தனர்க ளாமென்றிடின்,—வாசமுறு நின்பத்தி வாய்மை யை யெம்மனோர் வாயா லெடுத்தோதவும், வல்லரல் லாமைதேர்ந் தும்மவர்க் கொண்டோதல் வள்ளல்நின் னுளமறியுமே,—பாசமற வமுதோ டருட்பெருக் கொழுகு நின் பவளவாய் முத்த மருளே, பசுபதிக் கைலையினி லுறுபசுக் குலதலைவ பவளவாய் முத்தமருளே

ஒய்வறத் தோழ்மைகொணட்பினர் களிருவரி னுளமெனப் பல
ர்றிதர, வேரிங்குகை லாயவரை யிற்சில கணத்தொகைக ளுட
னினது பத்தியாய,—வாய்மையை யெடுத்தோதி நந்தியை நானறி
வன் மற்றவனு மெனையறி குவன், மன்னுமித னைநீவிர் புவியினிற்
காண்கவென வள்ளலிறை வாய் மலர்வோற்,—றூய்மைமிகு நின்னை
யுங் கைலையிறை தன்னையுந் தோயுமுருவொன்றே யெனச், சொலு
ம்வகையி லையமென் னங்ஙன மிருந்துமான் றெண்டில்வழு வாதநி
லவிப்,—பாய்வரை தனிற்காவல் புரிநந்தி தேவனே பவளவாய் முத்
தமருளே, பசுபதிக் கைலையினி லுறுபசுக் குலதலைவ பவளவாய் முத்
தமருளே.

வேறு.

சீலமாய பரஞ்சுடரைத் தெரிசிப் பான்செல் லடியரெல்லாஞ், செ
ம்மல் நின்பின் னிடமணைந்தே தேர்ந்து காண்டல் விதிநாடின்,—
றாலமாய நின்வதனக் கோட்டி னடுவிற் றரியசிவர், தோன்று மை
ந்து தொழிற் புரியுர் தூயருடன மியற்று மொரு—கோலமதனை
முப்போதுங் குறுகித் தரிசித் திடற்கென்னிற், குழுமு நினது பெரு
மையெவர் கூற வல்ல ரெங்கோவே,—மூலமலவா தனையகன்ற முத
லேமுத்தந் தருகவே, மூவாத் தேவர் தமக்குமொரு முதல்வா முத்த
ந் தருகவே. (௪)

வான முகட்டி னின்றிழியு மலையினருவி தனைக்கைம்மா, வந்து
துளைக்கை யாற்றகிப்ப மற்றப் புனன்மே லெழுதலொடு,—மீன
மொன்று வான்மீன மதனிற் றுக்க மிளிர்குருவும், விழித்தீங் கிருமீ
னைதென்ன மிகவு நினைக்குங் கான்மீன,—மூனமாகி விழுதலொடு
மொருமீ னிது மலையருவி, யோடுமீன மெனத்தெளிய வோங்குந்
திருச்சை லத்துடனே,—மோன நிலையா யுதித்தவொரு முதல்வா
முத்தந் தருகவே, மூவாத் தேவர் தமக்குமொரு முதல்வா முத்தந்
தருகவே.

முத்தப் பருவம்
முற்றிற்று.

## வருகைப் பருவம்.

பலவிதத் தனிமணியி னியாத்தவுச் சிப்பூவும் பட்டமொடு முக
சுட்டியும், பயின்மதா ணியும்வாகு வலயமொடு குண்டலம் பரிதி
யென நிலவெறிக்க,—நிலவுகாற் கிடசதங் கைத்தண்டை கழலுமே
ஞெகிழியொடு மோதியோங்கி, நீடவொலி தளர்நடையொ டெம்மீர
சைவத்திரு வீதியெங்கு நிகழ்தலுறவே,—மலமா சறுக்கு மொரு வெ
ண்ணீறு சண்ணித்த மேனியினி லக்கமாலை, வருமழ கெனுந்தீபி
னெய்யெனச் சிவலிங்க மார்பிடை யசைந் தாடவே, நலமுடைய
கைலையிற் காவல்புரி சற்குரவ நற்சிகா மணிவருகவே, நற்றவ
சிலாதராற் குற்றமக வாய்வந்த நந்திதே வன்வருகவே. (க)

பங்கமுறு மாமலர்ப் பிரமனல் லறிவாற் பயின்றுளான் பல
கலையெனப், பகருமது முகமனே யரியபல் வேதமொடு பதிமுகத்
துற்பவித்த,—துங்கமுறு முபபீடத டகுதியுஞ் சிவாகமத் தொகுதி
யும் பிறகலைகளுந், தோமற வுணர்ந்தா ரியத்தலைமை கொண்டே
துலங்கிச் சனற்குமாரன்முற்,—றங்குமா தவர்களுக் கப்பொரு ளெ
லாமுளந் தழையத் தெருட்டி யவர்பாற், சந்தேக மாதிகளை வித்தவர்
தமக்கெலாந் தலைமைபெறு குருநாதனீ,—நங்கடவு மேயெனும் வீர
சைவ வாசார நற்சிகா மணி வருகவே, நற்றவ சிலாதராற் குற்றமக
வாய்வந்த நந்திதே வன் வருகவே. • (உ)

### வேறு.

நீடுங்கோக னதத்துறையும் நிமலன் றனுந் திருவுறையும், நீல
வண்ண நிறத்தானும் நிகழுமதிகா ரஞ்செலுத்தி,—நாடுங்கதைசோ
தண்டமெனு நற்கோல்கொள்ள மாணியெலா, நறிய பலாசக் கோல்
கொள்ள நவில்நான்காமாச் சிரமத்தார்,—மூடும் பனைகோற் கொள்
ளமுதன் வணிகர்துலாக்கோன் முனைகொள்ள, முதிர்வேளாளர்த்தா

ற்றுக்கோல்கொள்ள மோலியரசர்செங்கோ,—றேமொறபிரம்புகொ ளுஞ் செம்மல்வருகவருகவே, திருமான் மாலு மகற்றுமொரு தே வே வருக வருகவே. (௯)

பத்திக்கடலே வருக மிகு பாசப்பகையே வருக வருட், பசுவி ன்றலைவா வருக குன்றாப் பண்பே வருக முழுமுதலாம்,—முத்திக் கரசே வருக சிவமோன நிலையே வருகவருண், மூர்த்திவருக, வெங்க டவ முதலே வருக முதன்மைப் பேறு.—சுத்திப்பொருளே வருக வொரு துரிய நிலைகண் டுணர்ந்தசுயஞ், சோதிவருக துகளகன்ற துணையே வருக பரமவருட்,—சித்திப் பொருளா மருணந்தி தேவே வருக வருகவே, திருமான் மாலு மகற்றுமொரு தேவே வருக வரு கவே. (௰)

பரனே வருக பசுத்தலைவ பதியே வருக வைம்பாசப், பற்றற் றவனே வருகசிவ பதிக்குத் தலைவா வருக செயும்,—வரமே வருக திருநந்தி வசவா வருக முத்திநலம், வழங்குங் குருவே வருகவெள்ளி மலையோ னிலையைக் காட்டுமொரு,—கரனே வருக மலமாசு களை வோய் வருக கருணைபொழி, காரே வருக சிவமருவுங் கன்றே வருக வபரசிவத்,—திரனே வருக வருணந்தி தேவே வருக வருகவே, திரு மான் மாலு மகற்றுமொரு தேவே வருக வருகவே. (௫)

வருகைப் பருவம்

முற்றிற்று.

---

## அம்புலிப் பருவம்.

கண்ணரிய சிவபரஞ் சுடர்தொடர்பு மேவாதநன்மலைச்சம்பந்த மே, நாளிரவி லேவங் திரைப்போது தான்பெறவை நண்ணுமிக் குரவனே தான்,—வண்ணமிகு மெந்தையுற வெள்ளியங் கைலைமலை வான்றொடு திருச்சைலமாம், மற்றிவை யிரண்டினுறு சம்பந்த

மேவியே வாழ்ந்திடுவ னெக்கால மும்,—விண்ணுறுங் கதிரினுஞ் வெண்மையுறு வாயிவன் வெள்ளியங் கைலை வரைபோல், வேறொ ருவ ருபகரிப் பின்றியெக் காலமும் மேவுமருள் வெண்மை யுடை யா,—னண்ணலிவ னொடுநிகர்தி யாதலின் மகிழ்ந்துநீ யம்புலி யாட வாவே, யரியமறை யுணர்பெரிய வருணந்தி தேவனோ டம்புலீ யாட வாவே. (க)

உலகிரு ளொதுக்கிநீ வெளிவந்த வங்ஙனே யோங்குகொழு நற்பிரிந்த, வொளி யிழைய நாரியர் தமக்குமயல் மூட்டுவை யோது மிவ னோஞானிகட்,—கிலகுமஞ் ஞானவிரு டனைநீக்கி யவர்தமக் கெப்போது மருண் மூட்டுவ, னெழினாரி மார்பல ரிணக்கமதின் மூழ்கியே யெப்போதும் நிற்பை யிவனு,—நிலவுசிவ பெருமா னடித் துணைகண் மறவாத நெஞ்சமொடு வீற்றிருப் பன், நேயமிகு மிவனு றவு கொள்வையே லுன்றனக் கொருகுறைவு நேராது கா,—ணலகிலாச் சோதியுரு வாயஎங் குருவிவனோடு மம்புலீ யாடவாவே, யரிய மறை யுணர்பெரிய வருணந்தி தேவனோ டம்புலீ யாடவாவே. (உ)

கரியவஞ் ஞானமிகு கள்ளவே டங்கொண் டணைந்தவர் கருத் தை மாற்றிக், கனலிங்க மேவியுட னுறவருள் புரிந்தவன் நின்ற னைக் காவான் கொலோ,—விரியும்நின் மேனிசில நாள்களிற் குறை படுவ தன்றிநீ மிகு காமியாய், மெய்யுரை புகன்றவா சிரியன் கிழத் தியை மேவியக் குற்றமதனாற்,—பெரியகயரோகமொடு துன்புறுவை யிவையெலாம் பேசுமிவ னோடா டிடிற்,—பேரருட் கனலிங்க முன் னுடலின் மேவுறப் பேசரியதீக் கைபுரிவ,—னரியவுட னேயொடு களங்கமத னால்நீங்கு மம்புலீ யாட வாவே, யரியமறை யுணர்பெரிய வருணந்தி தேவனோ டம்புலீ யாட வாவே. (ங)

வெஞ்சமணர் மூட்டிய பழித்தழலி னின்றால வாயினிடை மேயவசுர, மெய்மாற்றி யேவந்த பசுவினை யனந்தகுண மீனவனு நகரு ளாரும்,—விஞ்சுறக் காண்டலும் பயமுறீஇக் கூடலின் விமானத்தி

லமர்மூர்த்திபால், விண்ணப்ப மோடுமுறை யிடவிறை விளித்திவனை
யேவலுமப் பசுவும் விளைவிர்,—றுஞ்சி டவுங்காரமா திகளினில்
வெருட்டித் துலங்குதன் னிருகோட்டினூற், றூக்கியே வீசிச் சுளிந்
தொரு கணத்தழித் தவன்மெருகு சுராசுரர்களு,—மஞ்சுமிவ னூற்றலை
யுரைத்திடவு மரிதுகா ணம்புலீ யாட வாவே,—யரியமறை யுணர்
பெரிய வருணந்தி தேவனோ டம்புலீ யாடவாவே. (௯)

சந்தவிவ னபிதான மந்திரம தாம்நந்தி தேவனெனும் மருசார்ந்
துமுற், சாற்றரிய சமணப் பெருங்கட லழித்ததைச் சற்றுநீ யறி
யாய் கொலோ,—வந்தவறு பான்மூவர் தம்மிலிவன் மாப்பெயர் வாய்
ந்தநமி நந்தி யடிகள், மன்னுசம ணப்பேயர் தமைவென்று தன
னீரை வார்த்துத்தீ பப்பணி தனை,—முந்தவே செய்தவொருமாசரித
மாக்கதை மொழிந்தமுத் தமிழ்சேக் கிழான், மொழியொன்று
கொண்டுமுன் வாய்மலர்ந் திட்டமா முறை யினி விருப்ப தறிவா,—
யந்தமில னோடாடி னருள்வல்ல யம்பெறுவை யம்புலீ யாடவாவே,
யரியமறை யுணர்பெரிய வருணந்தி தேவனோ டம்புலீ யாட
வாவே. (௰)

அம்புலிப் பருவம்
முற்றிற்று.

---

## சிற்றிற் பருவம்.

புகழ்கொண் டோங்கும் நின்வரவு புலப்படாத காரணத் தாற்,
போகும் வழியிற் புழுதிகொடு புரிந்தோஞ் சிறிய சிற்றி லிவண்,—
மகிழ்கொண் டியற்று மதில் வதிந்தே மயங்கி நின்றே மாதலினால்,
வள்ளல் நினது கெம்பீர வரவு கண்டெ ழாதிருந்தோ,—மகழ்போற்
சுலவுங்கெடில வெள்ளத் தண்ணல் செய்ய நிறம்போல, வார்ந்த
புனல்பாய் தலின் விளைநெல் லரிய செந்நெ லாயவளந், திகழு மதி
கைத் திருநகரோய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வ மல்குஞ்
சிவலோகச் செல்வா சிற்றில் சிதையேலே. (௧)

வெய்ய சமணர் கோயில்கொலோ, வீயும் புத்தர் பாழிகொலோ, வீணராகும் பரமதத்தர் விரும்பி யியற்று மாலயமோ, தூய்ய நினது வுளமறியா திருக்குமோநீ தோன்றி யிவண், டோயு மெங்க டனிச்சிற்றி ல்ழிக்கிற் றூய புகழாமோ,—பைய யேதி தடமுழக்க வயலூர் சங்கம் பாங்கிருப்பப், பார்த்துக் கொக்கென் றனிமீனம் பரவ புனலி னொளிக்கும் வளச், செய்ய வதிகைத் திருநகரோய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வ மல்குஞ் சிவலோகச் செல்வாசிற்றில் சிதையேலே. (உ)

ஓங்கு நெடிய வீதியினி லுழந்து புழுதி தனிற் றோய்ந்தே யொளிர்வெண் மணலாற் சிறு சிற்றி லுவந்து செய்தற் பேதை, ர்தம்,—பாங்கு நிகழு மறியாத பண்பாம் விளையாட் டெனநினக்குப் பரிவாய்த் தெரிந்துஞ் சிறுகுற்றம் நோக்கி யழிக்கிற்பகருவ தென்,-றுங்குந் தடத்திற் குடைமகளிர் விழியை யினமாத் தாமுன்னிச் சாரு மீன மவர்குடத்தை யளேயென் றுள்ளி யதிற் சாருந், தேங்கு மதிகைத் திருநகரோய் சிறியேஞ் சிற்றில்சிதையேலே, செல்வ மல்குஞ் சிவலோகச் செல்வா சிற்றில் சிதையேலே. (ரு)

அண்ண ளினக்குஞ் சிவந் தனக்கும் பேத முண்டென் றறைந்தோமோ, வங்க லிங்கா சாரமர பதனைக் கிழென் றறைந்தோமோ,- வுண்ணுஞ் சரணர்க் கணமளியா வுலோபி யென்றே யுரைத்தோமோ, வொன்று முரையா வெங்க டனிச் சிற்றி லழிக்கி லுனக் கழகோ,— வெண்ணுந் தரும மொரு முப்பா னிரண்டும் நடத்த றனை நோக்கி, யிருஞ்சீர்த் தருமன் பூசித்த வியல்பி னிலைத்த தருமமெனுந்,— திண்ணென திகைத் திரு நகரோய் சிறியேஞ் சிற்றில் சிதையேலே செல்வ மல்குஞ் சிவலோகச் செல்வா சிற்றில் சிதையேலே. (சு)

வீறு பேசு மமணரிடம் வீழ வழித்தி சிவலிங்க,மிளிருஞ் சைவ, சமயமதின் மேவா ரிடமும் போயழித்தி,—நீறு பரவு மொருவீர சைவா சார நிந்தகரை, நீற வழித்தி நீள்புகழாஞ் சிற்றி லழிக்கி

னினைக்கெவனும்,—நாறு நடுங்கா லாட்டியர்தா மரையி னறலந் தனை யருந்தி, கவிப்பண் பாடக் கேட்டுவந்து நறிய மலர்ப் பொன் மிகச் சொரிந்து,—தேறுங்கொன்றை வனைகரோய் சிறியேஞ்சிற்றில் சிதையேலே, செல்வமல்குஞ் சிவலோகச் செல்வா சிற்றில் சிதையேலே.

சிற்றிற் பருவம்

முற்றிற்று

---

## சிறுபறைப் பருவம்.

தூயவீ ராகம மெனும்பெரிய முரசமேற் றொருகுசமெத் தலவாரி ஞற், றேமறுஞ் சிவபத்தியாந் தோலணைத் தூறுதி வயிராக மெனுங் கோற் கொடு,—மேயநல் லறிவெனுங் கையா லடித்துமேல் வீரசை வாசாரமோ, மிளிர்முழக் கஞ்செய்த வசவண்ண மூர்த்தியே மேவுமரு ணைந்தி முகிலே,—யாயமக லாசார லிங்கமலி சங் கம லிங்கம் வளர் குருலிங் கமும், மன்னுசிவ லிங்கமொடு பிரசாத லிங்கமா லிங்க மெனு மறுலிங் கமுஞ்,—சேயருமுணர்ந்திடத் தெளிவித்த தேசிகா சிறுபறை முழக்கியருளே, திருக்கைலை யதிகார வீரசை வாசார சிறுபறை முழக்கி யருளே. (க)

சாதிசூ தகமரண சூதகஞ் செனனசூ தகமெச்சில் ருதுசூதகஞ், சாற்றுமிப் பஞ்சசூ தகமுங் கடந்துமேற் றனைனுட் டிப்பதான,—தூதநிய மாசாரம் பிரத்தியா சாரமினிர் தருமிலிங்காசாரமே, சாருங் கணசார முயர்சிவா சாரமெனுஞ் சாற்றுபஞ் சாசார மும்,—தீதறுங் குருலிங்க சங்கமம் பிரசாதந்தீர்த்தநீ றுருத்தி ராக்கந் திருவைந்தெழுத்தெனச் சேர்ந்தவட் டாபரணந் திகழுமிவை யோடு கூடிச்,—சேதமறு மொருவீர சைவம் வளர்த்தவா சிறுபறை முழக்கி யருளே, —திருக்கைலை யதிகார வீரசை வாசார சிறுபறை முழக்கி யருளே

 

உற்றதே சிகபத்தி மாலிங்க பத்தியுடனேகுசங் கமபத்தி யென், றன்னுமா முத்திறப் பத்தியுட் குருபத்தி யோிங்குந் தனுக் கிரியை யான்,—மற்றுமத் தனுவையர்ப் பிப்பதா முட்கிரியை யாற் றனுவு மனமு மொன்ற, மன்னுமற் பிதஞ்செயன் மாலிங்க் பத்தி மேல் மருவுசங் கமபத்தி தான்,—நற்றனக்கிரியையாற் றனுமன தன ங்களை நயந்தற் பிதஞ் செய்தலா, நண்ணுமித் திரிவிதமு முடையரோ பத்தரெண நவில்வீர சைவ நிலையைச்,—செற்றமற வருள்செய்த வருணந்தி தேவனே சிறுபறை முழக்கி யருளே, திருக்கைலைய திகா ரவீரசைவ வாசார சிறு பறை முழக்கி யருளே. (௩)

வேறு.

வானவர் மெச்சும் வண்ணமய தாக மூலா தாரமுதன்
மன்னுறு மேழ்நிலை மரபுளி மாபளிங் காதிய வகைகொண்டு
தானெவர் காணினு மவர்நிழன் மேற்போய்த் தங்குத முங்குவபோற்
றயங்குஞ் சூனிய பீடம தொன்றைத் தான்செய் தன்னதிலே
மானல முறுமா சாரிய வல்லமன் வதிதரச் செய்தவருண்
மஞ்செனு வசவத் தனிநா மம்புனை மாதவ தேசிகனே
மோன நிலைக்கொரு ஞான விஞ்சை முழக்குக சிறுபறையே
முத்திக்கரசெனுஞ் சித்தசிகாமணி முழக்குகசிறுபறையே. (௪)
ஓதனங் குய்கமழ் கறி நெய் பாறயி ருறுபோ னகமெல்லா
மொருகோடி தனிலேயல்லமனுண்பா னூட்டியதனிமுதலே
மாதன மதனை யறிந்தே விச்சல மன்ன னிறும்பூ தாய்
மற்றது கைக்கொள வான முடங்கல் வாய்மலர்ந் தோதியவா
பூதல மெங்கும் பத்தி யெனும் பயிர் பொங்கி விளைந்துறவே
புண்ணிய சிவபோ கம்பெற வசவண பூரண காரணனே
மோதருண் மாரிப் பொழிமுகில் நந்தி முழக்குக சிறு பறையே
முத்திக் கரசெனுஞ் சித்த சிகாமணிமுழக்குகசிறுபறையே. (௫)

சிறுபறைப் பருவம் முற்றிற்று.

## சிறுதேர்ப் பருவம்.

இந்திரர்கள் பலரெனக் களிறிவர்ந் தேவரு மினியசிற் றரசர்
சணமு, மியலுருத் திரரெனத் தேரிவர்ந் தேவருமினியமன் னவர்
குழாமுஞ்,—சந்தமுறு மாலெனக் குதிரையிவ ரினமுஞ் சரோருகக்
கிழவ னென்னச், சார்பிரம சேனையொடு கூடியே படகந் தயங்குபே
ரிகை முரசமு,—முந்துதிரை கடல்போ லொலிக்கவே கொடி
குடை யுயர்சி கரத்தி னெங்க, வுறுசேனை சூழ்தரக் கலியாண புரி
நின் றுலாவுடன் போந்தல மனைச்,—சிந்தையி லிருத்திரே டிய
குரவ திலகனே சிறுதே ருருட்டி யருளே, தீரதா ரணவீர சைவதே
சிகவசவ சிறுதே ருருட்டி யருளே. (௧)

ஆர்தலுறு சிவலிங்க மூவகைய வகையிட்ட லிங்கமொடு பிரா
ணலிங்க, மருள்பாவ லிங்கமா மவற்றிட்ட லிங்கமஃ தாசிரிய
னிதுநின்னுயி,—ரோர்தல்செய் வாயென வுரைத்துமு னளித்ததா
முற்றதோர் பிராணலிங்க, முறுமஞ்ஞே குணவிகற் பங்களற் றங்ஙா
னுட் கொண்டதாம் பாவலிங்கந்,—தீர்தலுறு சாக்கிர சொப்பன
சுழுத்தியிற் றெய்வமிச் சிவலிங்கமே, தெளிவிதென வறிவுகொடு
வேறொன்று மெண்ணாத் திறத்தனை வீரசைவர், தேர்தலுறு
நெறிவிளக் கியதண்ட நாயகா சிறுதே ருருட்டி யருளே, தீரதா ரண
வீரசைவதே சிகவசவ சிறுதே ருருட்டி யருளே. (௨)

பருமணியி னியாத்தவா டகவிஞ்சி மீமிசைப் பரிதிசக டந்
தோய் தலிற், பயின்மணிகள் சிதறுபு விழுந்தவழி வம்பலர் பார்
த்தீதெ னிப்பகலினி,—லுருவுடைய வுடுவீழ்த லென்றெண்ணி
நோக்கவஃ துயர்சிரோ ரத்தினமதா, யுற்றதைக் காண்டலு மீதென்
னகோண்முடியி னுதிர்வுகொல்லோ வன்றெனின்,—மருவுமீ தந்த
ரத்தனிக ரிமைக்குமொரு வான்மணிகொ லோவஃதெனின்,—

மற்றதுப் பொன்னகர மங்கணிம் மணியிரா மதின்மணியெனத் தெ
ளிவுறுங், திருவுடைக் கலியாண புரிவாச னேசனே சிறந்தே ருருட்டி
யருளே, தீரதா ரணவீர சைவதே சிகவசவ சிறந்தேருருட்டி யருளே.

கற்றவிற் பனர்பரவு கைலேயினி லமர்பரன் கருதுமயி தான
மனுவாங், கைகண்ட பஞ் சாக்கரந்தூலஞ் சூக்குமங் காரணமதென்
னுமூன்றி,—லூற்றகா ரணமதனை யிருதலைக் கொள்ளியென் றுரை
க்குமது போல வசவ, வுன்பெயர்க் கடைமுதலுமொன்றாய தென்
னினீ யுயர்சிவ சொரூபமன்றோ.—நற்றவர் தொழுங்குரவ வீரசை
வாசார நற்பரம லிங்க மணியே, நவையற்ற வாதுளம் வீரமெனு மா
கமநலைடநின்ற சைவ நலமே.—செற்றவா ணவநந்தி தேவமா மூர்த்
தியே சிறந்தே ருருட்டி யருளே, தீரதா ரணவீர சைவதே சிகவசவ
சிறந்தே ருருட்டி யருளே. (௪)

உண்மையுணர் பெரியராந் தாயுமா னார்மொழியி லோதுதண்
டமிழலங்க, லூறத்தொடுக் கின்றோர்க டமையெலாஞ் சோதியா
துயர்பரஞ் சோதியெனவே,—வண்மையுற வாய்மலர்ந் திட்டவுரை
பிரமாண மாவதை மதித்தேமன, மகிழ்வோ டியற்றுமென் சிறுமொ
ழி தனக்குநீ மாநலம் புரிகுவைகொலோ,—நுண்மையறி வாலறிய
வேதாக மாதிகலை நுட்பங்க டாழுணர்ந்தே, நோண்மைபெறு வசவ
சற் குருநாத மூர்த்தியை னேதலுன் னுளமறியுமே,—திண்மையுறு
சிவஞான மிருநந்தி தேவனே சிறந்தே ருருட்டியருளே தீரதா ரண
வீர சைவதே சிகவசவ சிறந்தே ருருட்டியருளே. (௫)

ஓங்குசீர்க் கைலாய மதினின்று போந்தசிவ வொளிவீசு மலம
தேவ,னுத்தமச்சென்னவச வேசனுயர் சித்தரா மன்கொக்கு தேவனு
தித்,—தாங்குசங் கமசரணர் தம்புகழ்கள் பொலியவுந் தயங்குகல்
லாடையோடு, சாகரத் திற்போந்த பாலசித் தப்பிரான் றன்னரும்
புகழ் பொலியவும்,—பாங்குறுஞ் சிவஞான பாலைய தேசிகன் பச்சை

கந் தத் தேசிகன், பயில்சிவப் பிரகாச ணவனறுசர் தம்மருட் பரவு புகழ் பொலியவுஞ்சீர்,—தேங்குகலி யாணபுரி வாசவன் பர்கணேச சிறுதே ருருட்டியருளே, தீரதா ரணவீர சைவதே சிகவசவ சிறுதே ருருட்டி யருளே. (௰)

சிறுதேர்ப் பருவம்

முற்றிற்று.

திருநந்திதேவர் பிள்ளைத்தமிழ்

முற்றுப் பெற்றது.

---

துதி.

கயிலாயவரைச்சிவத்திருநிலயமுற்காவல்கவினக்கொண்டு
பயிலாருந்திருநந்திப்பெருமுகிலேபத்தியிலாப்பான்மையேன்பாற்
றுயிலாரும்போதுருவுகொடுதோன்றியருள்புரிந்ததொடர்பாலென்று
மயலாதியகற்றிநனியருளுமெனா ருக்கின்றேன் வன்னெஞ்சேனே.

திருநந்திதேவர் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

எட்டயபுரம்

ஸ்ரீமாந்.

# க. ஆண்டியப்பபிள்ளை

அவர்கள் மீது

## பிள்ளைத்தமிழும்
## உத்பசோதனைமஞ்சரியும்
## தனிக்கவிகளும்

எட்டயபுரம் சமஸ்தான வித்துவான்

ஸ்ரீமத்.

க. மீனாக்ஷிசுந்தரக்கவிராயரவர்களால்

இயற்றப்பெற்று

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிடப்பெற்றன.

1909.



உ (91|60)

குமரன் றுணை.

## க. ஆண்டியப்பபிள்ளையவர்கள்,

# பிள்ளைத்தமிழ்.



### விநாயகர் துதி.

கார்கொண்டநீள்பணைக்கையடியில்வெண்கோடுகதுவிவருகின்றகாட்சி, கருமுகிறவழ்ந்துவருமிருசிகரமத்தகங்காணுமலையானதலைசேர்; வார்கொண்டவாயெனுமுழைக்கணூர்வண்பிறைதன்வாய்க்கடையெடுத்துணுழைய, மாட்டாதராகுநிலைகாட்டுசிறுதாட்டுணைமதப்போதகத்தைநினைவாம்; ஏர்கொண்டமாதர்தமிணைப்பெருமுலைக்கெதிரிடுந்திறனுணர்ந்துசீறி, யீர்ங்கழுவிடப்பட்டதென்னவுமதான்றுதாளிணையாகவிண்ணைநோக்கிச்; சீர்கொண்டதவசுபுரிகின்றதெனவுங்கனகதிண்கலசமுடிகடோறுந், திகழ்மனைவிளங்கிளசையாண்டியப்பேந்திரன்செந்தமிழ்தழைத்துவரவே.

## நூல்

# காப்புப்பருவம்.

### திருமால்துதி.

கங்கைசேர்செங்கமலமாதுதனிறந்தனிற்காத்துறவும் வேறுபலவங், கனையரைமணந்தவள்புலந்திடில்வணங்கிநின்க னகமுலையிபமுமவர்தங்; கொங்கையிபமும்பொரச்செய்துபா ர்த்தேனெனக்கூறுபுதிருத்தியுலகைக், ஈர்ந்துநனிபூத்திடப்பு த்திரையிந்துகாக்குங்கருங்கொண்டல்காக்க; சிங்கநிகர்செக வீரராமக்குமாரெட்டசிமான்மனத்துமகிழுந், திவியமதிமுந் திரியைமிகுபுனிதகங்கைகுலதிலகனைவிளங்குதருவை; மங் களபுயாசலனையிங்கிதகுணநனைவண்குவளை மார்பமணியை, வரம்வேண்டினர்க்குதவிபுரியாண்டியப்பனென வருகாண்டி பப்பதியையே. (க)

சிறம்=மார்பு. அங்கனையர்=பெண்கள். இபம்=யானை.

### வேறு.

### சிவபெருமான் பார்வதி விநாயகர் முருகக்கடவுள்துதி.

மருவிலங்கியவரியகொன்றையைமதியைநஞ்சுறவாய்ந் திடப்பாந்தளை, மருவுகங்கையைநறியதும்பையைவளர்பெ ருஞ்சடையிண்டவைத்தேந்துகை, மழுவொடுங்கலைபணிபுரி ங்கிதவரததுங்கபதாம்புயத்தேந்தலை, மருங்கிநன்றுளமுருகி யன்றொருகரையிருந்தழுதேங்குநற்றேன்றலின்; இருதயக்

துளிருறநயக்தமுதுதவுமம்பிகையாங்கிரிக்காந்தையை, இணை
யறுங்குடவயிறுதங்கியவிருகுறும்பதமோங்குரத்தாம்பலை,யி
னியதொண்டர்தமனநினைந்தவை யெவையுமின்புறவேண்டுமெ
ட்டாம்படி, யெழிலொடுந்தருகுமரரம்பனையினிதிறைஞ்சியு
நாந்துதிப்பாந்தினம்; உருவிளங்கியகொடிகளும்பரிலுறநினை
ந்துவிஞ்ஞார்ந்திடத்தாம்பரி, யுவைநடந்திடவடிவழங்கிடுமிள
சையம்பதியார்ந்துவப்பாந்திற, முரிமைகொண்டவனயமிகுந்
தமிழியலனந்தமுமோர்ந்துறத்தேர்ந்தவ, ஞெருகணந்தனில்
யமகமுந்திரிபுகளும்விண்டுசொல்யாந்தருக்காம்பொருள்; அரு
ளொடுந்தருநிகரவுந்தருமதிபனஸ்பிடைவாஞ்சையுற் றேன்
பொரு, மரசனுந்தியபெரியவெஞ்சமரழியவென்றிடுவோன்
றுதித்தோன்றனை, யனுதினங்களியொடுமகிழ்ந்தருளதுலசுந்
தரவாண்டியப்பேந்திர, வபயனென்றிடுசுகுணகந்தனைநனிபு
ரந்திடவேண்டிமிக்கோங்கவே. (உ)

## பிரமதேவன் தேவேந்திரன் இலக்குமி சரசுபதி சத்தமாதர் முப்பத்துமுக்கோடிதேவர்துதி.

தோட்டுக்கமலவீட்டயனுந்துதியோங்கமராபதியோனுந்
துலக்குங்கருணையிலக்குமியுஞ்சொல்லாடமிழ்க்குவல்லாளு
மோட்டுமயிடற்றீட்டுவளுமுன்னியருளேழ்கன்னியரு
முப்பதொடுமுக்கோடியெனுமுதியவிமையவரும்புரக்க

நாட்டிற்கனகம்பெயும்புயலைநவிலும்புலவரிருநிதியை
நலஞ்சேர்கருத்தமுத்தீன்றநமதுகுலசிந்தாமணியை [றை
யீட்டுங்கருணைப்பெருங்கடலையினியதருவைக்குணக்குன்
யிளசைமதிமந்திரியைவரமிசையாண்டியப்பமேதனுவையே. ( )

முதலாவது காப்புப்பருவம் முற்றிற்று.

ஆகப்பாட்டு ச.

---

# ௨-வது செங்கீரைப்பருவம்.

---

நினதுமுகமதியினைக்கண்டகைப்பங்கயநிகழ்ந்திதுவலி
ந்துதழுவ,நேர்ந்தருகெழுந்துவந்தனுகம்பதிப்பரிதிநேசமனமு
ன்னியோநம்; மனநிலைமைகண்டோவலாதினிக்காணவோ
மழுவுடையசோதிமுடிமேல், வதிமகிமையாலஞ்சியேயாதடைபு
ரிந்திடவும்வந்திலையாதுபுரிவோம்; எனநணிநினைந்தஃதினை
திருமுமற்றிருமியேங்கிநிலமீதுகுப்புற், றிருந்தனவெனப்பா
ணியூன்றிமுகமாடவொரெழிற்பதமிதித்திருந்து; தினகர
னுமோடிவலம்வருமிளசையூரனேசெங்கீரையாடியருளே, தி
கழ்பாண்டியற்குநிகர் புகழாண்டியப்பமுகில் செங்கீரையாடி
யருளே. (க)

ஒருமானையேந்திவருபெருமானொடுபுநினுமையவடனக்
குழவேட்கை, யொடுநினதுமேனிசெம்பாதிதந்ததுமன்றி.

யோவாதவட்குவெருவி; மருமாலைவேணிகொண்டெடன்னையு
மொழித்துநிதம்வைத்தனையிதென்னவவள்பான், மருவுபோ
வென்றுசினமுறுபோதெனுசைமடமங்கையேநின்னையென்
னே;டிருமாநிலத்தவளுமேசுமந்திடவுமேலேற்றமுறுபவளுநீ
யே, யென்பதுதெரிந்திடவுமன்றேபுரிந்ததவிரண்டுமென
வூடல்போய்முழ; திருமாதரத்தினணைகங்கைகுலசேகராசெங்
கீரையாடியருளே, திகழ்பாண்டியற்குநிகர்புகழாண்டியப்
பழுநில்செங்கீரையாடியருளே. (உ)

ஆவலொடும்பலபண்பயிறும்பிகளங்கோலஞ்சார
வங்கைவிலுங்கொடுவெந்தமதன்றனையங்கோலஞ்சார
மாவிழியால்வெலுவோர்பதமாபதுமந்தானங்கோடி
வாடியுநேடியமாறதிமாதருமந்தானங்கோடி
யேவளரப்புகழ்சூழிளசைப்பதியின்பாலன்பார்வை
யென்றவர்தங்களைநன்றுபுரந்துமையின்பாலன்பார்வை
தேவமுதாங்கருணாநிதிபெற்றவசெங்கோசெங்கீரை
தேர்ந்துரையாண்டியப்பேந்திரவுத்தமசெங்கோசெங்கீரை.()

அங்கோலஞ்சார=அழகிய அம்பு ஐந்து பொருந்த, அங்குஒல்
லிட. மா விழியால் வெலுவோர்= அழகிய நெற்றிக்கண்ணுல் வெ
ல்லும் சிவபிரானது. பதமாபதுமந்தான்=திருவடியாகிய சிறந்த
தாமரையை. அங்கு ஓடி வாடியும்நேடியமால்=அவண் ஓடிவருந்தி
த்தேடியவிட்டுணு. நதிமாதருமம் தானம்=புகழும் பெரிய தரு
மமும் தானமும். இளசைப்பதியின்பால் அன்பு ஆர்வை=இள

க. ஆண்டியப்பபிள்ளை

சைநகரில் அன்பு நிறைந்தாய். உமையின்பாலன் பார்வை=பார்வதிபுத்திரனான குமாரக்கடவுளது கடாட்சம்.

செங்கீரைப்பருவமுற்றிற்று.

ஆகப்பருவம் ௨-க்கு பாட்டு எ.

---

# ௩-வது தாலப்பருவம்.

---

கந்தமுறுதண்பொதும்பரளிக்காடும்புயலுந்துணைபெணநீங், காதுசேர்த்துப்பொருவதனைக்காணூஉமதுவைச்சிறையிருக்க; வந்தபுயலைச்சஞ்சலமேமருவப்பசும்பொங்கருமலைந்து, வணங்கிநிதங்காவெனத்திறையாமலருமளித்துக்கண்ணீரைச்; சிந்தியிரங்கப்புரிகுழலிற்றேந்தார்களோங்கைந்தருவினிடைச், சிறுமாமகளிர்வீசுமதைத்தேவர்புலவிமாதருக்குத், தந்துபுணர்ந்துபுகழிளசைத்தாணுபதியேதாலேலோ, சகத்திலுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (க)

பொதும்பர்=சோலை. சிறை=இறகு, சிறைச்சாலை. சஞ்சலம்=மின்னல், துன்பம். கா=சோலை, காப்பாற்று. கண்ணீர்=தேனாகியநீர், கண்ணீர்.

நவிலுந்துகிலமருங்கொடிக்கணந்தேமடவார்மருங்கொடிக்க
நாட்டுமாகமுகிலையுறநணுகிமாகமுகிலையுற
அவிர்தேனுவின்வானரம்பாயதறுந்துவிழவானரம்பாய

அரியைவிலகாவணங்குலவவமையுமலர்க்காவணங்குலவத்
திவள்மாதருக்குச்சந்தோடத்தேன்மாதருக்குச்சந்தோடத்
திருவாய்வனசத்திரந்தழைக்கத்திரண்டுணனசத் திரந்தழைக்
தவழும்புகழ்செய்வளத்திளசைத்தானுபதியேதாலேலோ[கத்
சகத்திலுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (உ)

துகிலமரும் கொடிக்கணம் தேமடவார் மருங்குஒடிக்க—சீலை பொருந்திய கொடியினம் தெய்வப்பெண்களின் இடையை ஒடிக்க. மாகமுகிலை—ஆகாயத்தின்மேகத்தை. மா கமுகுஇலைஉற—அழகியகமுகின் இலைமேவ. தேனுவின் வால் நரம்பு ஆயது—காமதேனுவின் வால் நரம்பானது. வானரம்பாய—குரங்குகள் தாவ. அரியை விலகா அணங்கு—விட்டுணுவை விலகாத இலக்குமி. மாதருக்குச்சந்தோடத்தேன்—சிறந்த களிப்பும் சந்தோஷமுமுள்ள தேன்வண்டு. மாதருக்குச்சந்தோட—பெண்கட்குத் தூது போக. திருவாய் வனசத்து இரந்து அழைக்கத் திரண்டு உண் அன சத்திரம்தழைக்க—அழகிய வாயாகிய தாமரையால் பணிந்து அழைக்க (விருந்தினர்) திரண்டு அருந்துகின்ற அன்னசத்திரம் செழிக்க.

தங்கமணிச்சிகரபணமேற்றங்கவிளங்கியெங்கணுநித்
தங்கதிரைவீசப்பெயர்மாதங்கமெனக்கொண்டதற்கேற்பத்
தங்கள்கரியநிறத்தைவிடுத்தங்கமுழுதுஞ்சேர்ந்திருதந்
தங்கவினும்பல்லிபங்கள்மிகுந்தங்கணுலவுமிளசையின்முச்
சங்கமகிழ்ந்துபுகழுமிரசங்கனியமுத்தமிழ்கள்பிர
சங்கமியற்றுங்கருத்தமுத்துச்சங்கநிதிபாலுதித்துமுக்கட்

சங்கரனைப்போற்றிப்பணியுந்தானுபதியேதாலேலோ
சகத்திலுயராண்டியப்பபுரந்தரனேதாலோதாலேலோ. (௩)

தாலப்பருவம் முற்றிற்று.

ஆகப்பருவம் ௩-க்குப்பாட்டு ௧௦.

---

# ௪-வது சப்பாணிப்பருவம்.

---

வானகமடுத்தலாலெழுதுளியமைந்ததான்மணியாழியுற்ற விரலான், மன்னிலவணக்கமிகவாங்கிடக்கும்பிடுவதாற்கனக மின்னிவரலாற்;பூனலங்காட்டலாலுறுதியாகத்திற்பொலிந்திடுதலாலுமுன்கை, போன்றனமெனக்கருவமேவியெதிரிட்டிடுபுயற்குழாமுழுதும்வெருவ;வேனலமரப்படியார்க்குமிடிதருநீயெமிணையோவெனச்சீறியே, யிதுபொருத்தனமினிச்செல்லெனச்சொற்றிடவெடுத்திருகைகொட்டுவதுபோற்; ருனங்கரெட்டபுரம் வளராண்டியப்பமுகில் சப்பாணிகொட்டியருளே, தப்பாதுதுட்டர்களையெப்போதும்வெட்டுபவசப்பாணிகொட்டியருளே. (௧)

வானகமடுத்தலால்=வெள்ளியநகம்பொருந்தலால், மேலிடத்தில் நிறைந்திருத்தலால். எழுதுளி=எழுத்தாணி, எழுகின்றநீர்த்திவலை. மணியாழி=இரத்தினமோதிரம், அழகியகடல். விரல்=கைவிரல், வலி[illegible] மன்னிலவணக்கம்=நிலைபெற்ற உலகத்தார் வணக்கத்தை, [illegible]கி உப்புநீரை. கும்பிடுவதால்=அஞ்சலி

த்தலால், கூட்டமிடுவதால். கனகம்—பொன், கல்மலை. பூ—மலர், பூமி. உறுதியாகம்—மிக்ககொடை, பயன்றரும் யாகம். ஆர்க்குமிடி—யாவர்க்கும் வறுமை, முழங்கும் இடி. செல்—போ, மேகம்.

அரியசிறுநூன்மருங்கநலார்செவ்வரியினம்பகமதுக்கு முரிநின், னருட்டேன்மணத்திடுமுகத்தாமரைப்போதவாவிப் பராவிலாவித்; தருமிச்சிலாக்காதுகைதட்டியோச்சிடு தறனையொப்பவும்பன்மடவார், சந்தமிகுபுருடர்கண்வழுக்கிடாதிட்டகற்றங்கிளங்கொங்கைமலையில்; ஒருவூச்சுறப்புரிந்தானுஞ்சிவக்குநினதொண்கைகொடுதாடனஞ்செய், துறுங்கால்வருந்துமென்றஞ்சுபுபழக்கரிடலொப்பவுமுடுக்கையேந்து; சருமதரனைத்துதிசெயாண்டியப்பேந்திரா சப்பாணிகொட்டியருளே, தப்பாதுதுட்டர்களையெப்போதும்வெட்டுபவசப்பாணிகொட்டியருளே. (உ)

## வேறு.

கந்தமலிந்தபசுங்குழலம்பிகைகட்டியிருப்பாணி
கல்லவும்வல்லவெமுள்ளமுவந்துதிகட்டியிருப்பாணி
வந்தயாபரிதன்னிருகொங்கையமட்டுமெருப்பாணி
மலனொடுகந்தனையருளொடுதந்தவண்மட்டுமருப்பாணி
இந்துபுனைந்தவனேடுசுமந்திடவிட்டதிருப்பாணி
யென்றகுலந்தனில்வந்தவதானநலி[illegible]ப்பாணி

